# ஆன் பிராங்க்

யோனா செல்ட்டிஸ்

தமிழில் கிருஷ்ணன்



# ஆன் பிராங்க்

## முக்கியமான தேதிகள்

ஜூன் 12,1929 ஆன் பிராங்க் ஜெர்மனியில் உள்ள பிராங்க்-போர்ட் ல் பிறந்தாள்.
பிப்ரவரி 1934 ஆன் பிராங்க்கின் குடும்பம் ஹாலந்தில் உள்ள ஆம்ஸ்டெர்டாமில் குடி பெயர்ந்தார்கள். அங்கு பள்ளியில் சேர்ந்தாள்.
செப்டம்பர் 1939 ஹிட்லரின் படை போலந்தை கைப்பற்றுகிறது. இரண்டாம் உலக போர் துவங்குகிறது.
ஜூன் 12, 1942 ஆன் பிராங்க்கின் 13வது பிறந்தநாளுக்கு
ஒரு டைரி பரிசாக பெறுகிறாள். அதில் அவளுடைய கற்பனை தோழி-கிட்டயிற்கு ஏதோ எழுதுகிறாள்.
ஜூலை 6, 1942 பிராங்க்கின் குடும்பம் ஒரு ரகசிய இருப்பிடத்தில் குடிபெயர்கிறார்கள்.
ஜூலை 13, 1942 வான் பெல்ஸ் குடும்பமும் பிராங்க்கின் குடும்பத்தோடு சேர்ந்து வாசிக்க தொடங்குகிறார்கள்.
நவம்பர் 16, 1942 பிரிட்ஸ் பெய்பர் என்பவரும் அவர்கோளடு சேர்கிறார்.
ஆகஸ்ட் 4, 1944 ஆன் பிராங்க்கின் குடும்பமும் மற்றவர்களும் கைது செய்ய படுகின்றனர்
செப்டம்பர் 1944 கைது செய்யப்பட்ட அனைவரும் போலந்தில் உள்ள அஷ்விட்ஸ் எனும் வதை முகாமிற்கு கொண்டு செல்லப்படுகின்றனர்
அக்டோபர் 1944 ஆன் பிராங்க்கையும் மார்கோட்டையும் பெர்கென்-பெல்சன் எனும் வதை முகாமிற்கு கொண்டு செல்ல படுகின்றனர்
பெப்ரவரி/மார்ச் ஆனும் மார்கோட்டும் டைபஸ் எனும் நோயால் இறக்கின்றனர்
கோடை 1947 ஆன் பிராங்க் டைரி டச்சு மொழியில் பதிப்பிக்க படுகிறது
1952ல் முதன் முறையாக ஆங்கில மொழியில் பதிப்பிக்க படுகிறது.





ஜூலை மாத மழை காலத்தில் அதிகாலையிலேயே ஒரு இளம் பெண்ணும் அவளுடைய பெற்றோரும் மிக விரைவாக நடந்து செல்கிறார்கள். வெளியே வெப்பம் அதிகமாக இருந்த போதும் அவர்கள் குளிருக்கான ஆடைகளை அணிந்திருந்தனர். அந்த இளம்பெண் இரண்டு உள்-சட்டைகளையும், மூன்று ஜோடி உள்ளாடை, ஒரு ஸ்கர்ட், ஜாக்கெட், ஷார்ட்ஸ், இரண்டு ஜோடி ஸ்டாக்கிங்ஸ், ஷூஸ், தொப்பி, ஸ்கார்ப் போன்றவைகளை அணிந்திருந்தாள். வேறு சில துணிகள், காகிதங்கள் எல்லாம் அவர்கள் எடுத்து சென்ற பையில் திணிக்கபட்டிருந்தது. அந்த பை கனமாக இருந்தது. மழையோ ஜோராக பெய்து  கொண்டிருந்தது. அங்கு விரைந்து கொண்டிருந்த வண்டிகள் எதுவும் அவர்களை ஏற்றி கொள்ளவில்லை. அந்த இளம்பெண்ணுக்கு அப்போது தெரியாது அவர்கள் வெளியே நடமாடுவதற்கு இரண்டு ஆண்டுகள் எடுக்கும் என்று. அந்த இளம்பெண்ணின் பெயர் தான் ஆன்  பிராங்க்.



ஆன்  பிராங்க் ஜெர்மனியில் பிறந்தாள். அவளுடைய பெற்றோர்கள் எடித்தும். ஓட்டோவும் ஜெர்மன் யூதர் இனத்தை சேர்ந்தவர்கள். அவர்கள் பிராங்கபர்ட் நகரத்தில் உள்ள மெயின் எனும் இடத்தை பூர்விகமாக கொண்டிருந்தனர். அங்கு தான் ஓட்டோவின் குடும்பம் பல நூற்றாண்டுகளாக வாழ்ந்து வந்தனர். பிராங்க் குடும்பத்திற்கு  முதலில் மார்கோட் எனும் பெண் குழந்தை  பிறந்தாள். ஜூன்12 1929ல் ஆன் பிறந்தாள். ஒரு அழகான சுற்றுப்புறத்தில்  பிராங்க் குடும்பத்தின் வீடு அமைந்திருந்தது. அங்கு ஆன் அக்கம் பக்கத்திலுருக்கும் பிள்ளைகளோடு விளையாடி மகிழ்ந்தாள்.

அப்பா, அம்மா, மார்கோட் என்று ஆனிற்கு அன்பு சூழிந்திருந்த வாழ்வு அமைந்திருந்தாலும் வெளியே ஒரு அபாயகரமான சூழல் உருவாகி கொண்டிருந்தது. மக்கள் வேலையிழந்து கொண்டிருந்தனர். உண்ண உணவும் உடுத்த உடையும் இல்லாமல் மக்கள் பயத்திலும், கோபத்திலும் வாழ்ந்து கொண்டிருந்தனர். யாரேனும் ஒரு தலைமை உருவாகி இந்த நிலையிலிருந்து நாட்டை காப்பாற்றுவார்களா என்று எண்ணி தவித்தனர். அப்போது தான் ஹிட்லர் ஆட்சிக்கு வருகிறான். அவன் எல்லா துயரையும் போக்குவான் என்று மக்கள் நம்புகிறார்கள். இந்த பூமியிலேயே ஜெர்மன் இனம் தான் புனிதமானது என்று ஹிட்லர் அம்மக்களிடம் அறைகூவல் விடுகிறான். அந்நாட்டின் எல்லா பிரச்சினைகளுக்கும் காரணம் அங்கு வாழும் யூத மக்கள் தான் என்று கூறுகிறான். அவர்களை அச்சமூகத்திலுருந்து புறக்கணிக்கும் படியான சட்டங்களை உருவாக்குகிறான். ஹிட்லரையும் அவனை ஆதரித்தவர்களையும் நாஜி என்று அழைக்கப்பட்டனர்.  “நேஷனல் சோசலிஸ்ட்” என்பதே அதன் பொருள்.





ஆனின் தந்தை ஜெர்மனி நாட்டில் யூதராக இருப்பது பேராபத்து என்று உணர்ந்து கொண்டார். அதனால் ஆன் நான்கு வயதாக இருக்கும் போதே அவர் தன் குடும்பத்தை நெதர்லாந்தில் உள்ள ஆம்ஸ்டெர்டாமிற்கு அழைத்து வந்து விட்டார். அவர்களுடைய புதிய வீடு கடற் புறத்தின் அருகாமையில் அமைந்திருந்தது. அதனால் அவர்களுக்கு மிகவும் பிடித்து போனது. கோடை விடுமுறைகள் கொண்டாட்டமாகவே கழிந்தன.

ஆன் ஐந்தாம் வயதில் பள்ளியில் சேர்ந்தாள். மிக விரைவில் படிக்கவும் எழுதவும் கற்று கொண்டாள். பள்ளியில் அவள் ஒரு சிறந்த மாணவியாக விளங்கினாள். எப்போதும் கலகலப்பாக இருந்ததால் அவளுக்கு நிறைய நண்பர்கள் இருந்தனர். பள்ளி நாடங்களில் எப்போதும் அவளுக்கு முக்கியமான பாத்திரம் கொடுக்கப்பட்டது.





1939ல் ஹிட்லர் போலந்து மேல் போர் தொடுத்தான். ஐரோப்பாவில் எல்லா இடங்களிலும் போர் மூண்டது. ஹிட்லரின் படை ஆன் குடும்பம் வாழும் நெதெர்லாந்துக்கு வந்தடைந்தது.

போர் காலமாக இருந்த போதும் ஆனின் சிறிய உலகம் நண்பர்கள், வரலாறு, சினிமா நட்சத்திரங்கள், செல்ல நாய்கள், பூனைகள் என நிறைந்திருந்தது. அவளுக்கு பிடித்த இன்னொரு விஷயம் சிகப்பு வெள்ளை நிறம் கொண்ட டைரி. அது அவளின் 13ஆம் வயது பிறந்த நாள் அன்பளிப்பாக அவளுடைய பெற்றோர்கள் கொடுத்தனர். அதை அவளுடைய ஒரு கற்பனை தோழியாகவே நினைத்தாள். அதற்கு  கிட்டி என்று பெயரும் வைத்தாள். ஒவ்வொரு குறிப்பும் எழுதும் போதும் “டியர் கிட்டி” என்றே தொடங்கினாள்.

அவளது டைரியில் எழுதும் போது கிட்டியிடம் ஹிட்லரின் யூதர்களுக்கு எதிரான சட்டங்கள் ஹோலாந்தில் எப்படி பரவி வருகிறது என்பதை விவரமாக எழுதினாள். யூதர்கள் வேலைகளை இழந்தனர். அவர்களுடைய உடைமைகளை இழந்தனர். ஆறு வயதை தாண்டிய அனைத்து யூதர்களும் இரண்டு முக்கோண வடிவம் கொண்ட குறியை அவர்கள் துணியில் அணிய வேண்டும். இதை "ஸ்டார் ஆப் டேவிட்" என்று அழைப்பார்கள். இந்த சூழலில் தான் ஆனின் தந்தை போர் முடியும் வரை ஒரு மறைவிடத்தில் வாழ திட்டமிட்டு கொண்டிருந்தார். இது ஆனிக்கு தெரியாது.





1942ல் ஜூலை மாதம் ஆனின் குடும்பம் அந்த மறைவான கட்டிடத்திற்கு குடி பெயர்ந்தனர். அந்த இடம் ஆனின் தந்தை ஓட்டோ பிராங்க்கின் வணிக வளாகத்தின் பின்னதாகவே இருந்தது. அதை ஒரு ரகசிய வீடு என்றே அழைத்தாள். அந்த வீட்டின் வாசலை ஒரு நகர்த்த கூடிய புத்தக அலமாரி ஒன்றை கட்டி அடைத்தார்கள். ஏழு பேருக்கு மட்டுமே அவர்கள் இருப்பது தெரியும். அதில் நான்கு பேர் ஓட்டோ அலுவலகத்தில் வேலை செய்தவர்கள். இவர்கள் அன்றாட தேவைக்கான உணவு, உடைகள் கடத்தி கொண்டு வந்து கொடுத்தனர். அவர்கள் உயிரை பணயம் வைத்தே இதை செய்தார்கள். ஜெர்மனியர்களிடம் பிடிபட்டால் மரணம் நிச்சயம்.



ரகசிய வீட்டில் குடிபெயர்ந்து ஒரே வாரத்தில் வான் பெல்ஸ் தம்பதியினர் அவர்கள் பிள்ளை பீட்டரோடு அதே கட்டிடத்தில் குடி பெயர்ந்தனர். பீட்டருக்கு பதினைந்து வயதிருக்கும். அவன் ஒரு பூனை குட்டியும் கொண்டு வந்திருந்தான். ஆன் அந்த பூனையை கண்டதில் மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள் ஏனென்றால் அவளுடைய செல்ல பூனையை கொண்டு வராமல் போனது மிகவும் வருத்தமாக இருந்தது. அதே நவம்பர் மாத கடைசியில் பிரிட்ஸ் பிபர் எனும் பல் மருத்துவரும் அவர்களோடு சேர்ந்து கொண்டார்.



மறைவாக வாழ்வது என்பது அவ்வளவு எளிது அல்ல. ஆன் மிகவும் தனிமையாக உணர்ந்தாள். நண்பர்கள் இல்லாமல் வெறுமையாக இருந்தது அவளுக்கு. அவளுடைய பள்ளிக்கூடத்திற்கு போக வேண்டும் என்று மிகவும் விரும்பினாள். அந்த சுதந்திரம் எப்போது இனி கிடைக்கும் என்று ஏங்கினாள். பழக்கமில்லாத நபர்களோடு நெருங்கி வாழ்வதிலும் பல சிக்கல்கள் உருவாக்கியது. மனஸ்தாபங்கள் உண்டாக்கியது. அம்மாவோடும் தன் சகோதிரியோடும் வாக்குவாதம் வந்தது. அப்பாவும் ஆனியை பல நேரங்களில் தவறாக புரிந்து கொண்டார். இந்த சோகங்கள் அனைத்தையும் அவள் டைரியில் கொட்டி தீர்த்தாள். கிட்டி மட்டுமே ஆனியின் அருமை தோழியானாள்.



ஆனி ரகசிய வீட்டில் குடி புகுந்தவுடன் தன்னுடைய முதல் சில நாட்களின் அனுபவங்களை கிட்டியிடம் எழுதியிருந்தாள். அவள் பள்ளிக்கு செல்லும் கருப்பு சைக்கிள், பள்ளி நண்பர்கள், வீட்டில் அவளுடைய அறை இவை அனைத்தையும் நினைத்து மிகவும் ஏக்கம் அடைந்தாள். அவர்கள் அங்கு தங்கியிருப்பது யாருக்கும் தெரிந்து விட கூடாது என்பதற்கே அவர்கள் எப்போதும் இரகசியமாகவே பேசினார்கள், மெலிதாகவே நடந்தார்கள். இரவில் மட்டும் தான் சற்று பயமின்றி ஓய்வு எடுத்தார்கள். அதுவும் ஜன்னல்களின் தெரியாமல் இருப்பதற்கு மிக கவனம் கொள்ள வேண்டும். வீட்டில் இருந்த ஒட்டு துணிகளை கொண்டு ஆனியும் அவள் அப்பாவும் ஜன்னல் திரை தைத்தனர். அதை இரு பக்க சுவர்களில் ஒட்டி ஜன்னலை மறைத்தனர்.



ஆன் தைரியமான பெண். புத்தகம் படிப்பது, பள்ளி பாடம் செய்வது என தன்னை எப்போதும் எதாவது வேலையில் ஈடுபடுத்தி கொள்வாள். தான் பள்ளிக்கு திரும்பும் போது பின்தங்கி விட கூடாது என்பதில் கவனமாக இருந்தாள். ஐரோப்பாவில் வாழ்ந்து வந்த எல்லா ராஜா ராணிகளின் குடும்ப பரம்பரைகளை விவரமாக பட்டியலிட்டாள். சுருக்கெழுத்து கற்று கொண்டாள். அவளுக்கு பிடித்த சினிமா நட்சத்திரங்களின் படத்தை சுவரில் ஒட்டி மகிழ்ந்தாள். இந்த மறைவு வாழ்விலும் சில பரிசுகளும் இன்ப அதிர்ச்சிகளும் இருக்கவே செய்தன. ஒருமுறை அவளுடைய ஷூஸ் சிறியதாக போனதாக தெரிந்து அவளுக்கு ஒரு சிகப்பு ஹை ஹீல்ஸ் செருப்பு வாங்கி கொண்டு வந்தார் மியப் ஜெய்ஸ் எனும் குடும்ப நண்பர்.





வீட்டிலேயே ஆனிற்கு பிடித்தது மாடியில் உள்ள அறை தான். அங்கு ஒரு சிறிய ஜன்னல் உள்ளது அதை திறந்தால் வானில் உள்ள நட்சத்திரங்களை பார்க்கலாம் சூரிய வெளிச்சமும், தெருவிற்கு எதிரில் உள்ள கோபுரத்தையும் பார்க்க முடியும். ஆனும் மார்கோட்டும் படிப்பதற்கு அடிக்கடி அங்கு செல்வார்கள். அதன் பிறகு ஆனும் பீட்டரும் நெருங்கிய நண்பர்களான பிறகு அவர்கள் மனம் விட்டு பேசுவதற்கான இடமாக மாறியது.

ஆன் மாடியில் தனிமையில் உட்கார்ந்து இருக்கும் போது போர் முடிந்த பிறகு தான் என்ன செய்ய வேண்டும் என்று திட்டமிடுவாள். அவளுக்கு ஒரு எழுத்தாளராக வேண்டும். அவளுடைய டைரி மட்டுமில்லாமல் தேவதை கதைகளும், கற்பனை கதைகளும் கூட எழுதுவாள். அப்போது கூட கதைகளும், நிகழ்வுகளும் என்ற ஒரு புத்தகத்தை எழுதி கொண்டிருந்தாள். டச்சு அரசு போர்க்காலத்தில் மக்களால் எழுதப்பட்ட டைரி குறிப்புகளை தாமே வெளியிட போவதாக கூறியதை கேட்ட ஆன் தன்னுடைய குறிப்புகளை நல்ல காகிதத்தில் அழகாக எழுதி வைக்க தொடங்கினாள். ஒரு நாள் தான் எழுதியதை தன் நாட்டிலுள்ள எல்லோரும் படிப்பார்கள் என்று நினைத்து பெருமிதம் அடைந்தாள்.



ஆன் வீட்டில் உள்ள உலகத்திலுருந்து தனிமைபட்டிருந்தாலும் நாட்டு நடப்பை ஓட்டோவின் அலுவலகத்தில் இருந்த ரேடியோ மூலம் கேட்டு தெரிந்து கொண்டனர். இரவுகளில் சத்தமிடாமல் அறையில் நுழைந்து ரேடியோவை இடுவார்கள். ஜெர்மனி தோற்பதை கேட்ட ஆன் மனதில் ஒரு நம்பிக்கை உண்டாக்கியது. மனிதர்கள் எவ்வளவு குறைபாடு கொண்டிருந்தாலும் இயற்கையிலேயே நல்லவர்கள் தான் என்று ஆழமாக நம்பினாள். இதை அவள் டைரியில் எழுதியிருந்தாள்.




ஆன் குடும்பம் தங்கியிருந்த இடத்தை யாரோ உளவு பார்த்து போலீஸிடம் காட்டிக்கொடுத்து விட்டனர். ஆகஸ்ட்4 1944 இரகசிய இடத்தை ஜெர்மன், டச்சு நாஜிக்கள் சோதனை செய்து அனைவரையும் கைது செய்தனர். ஆன் மற்றும் அனைவரும் கைதிகளாயினர். பிராங்க், வான் பெல்ஸ், பிரிட்ஸ் பிபர் குடும்பங்கள் ஹாலந்தில் உள்ள வெஸ்டெர்போர்க் எனும் வதை முகாமிற்கு அனுப்பப்பட்டனர். அங்கு அவர்கள் நாஜிக்களிடம் அடிமையாக வேலை செய்ய வைக்கப்பட்டனர்.



திரும்பி ஒரு மாதம் கழித்து அவர்களை ஆஸ்விட்ச் எனும் வதை முகாமிற்கு கொண்டு செல்லப்பட்டனர். அங்கு நிலைமையோ கொடுமை. அங்கே உண்ண உணவு, குடிக்க தண்ணீர்,உடுத்த உடை கூட இல்லாமல் வேலை செய்ய வைக்கபட்டனர். அவர்களை சுற்றி நிறைய பேர் பசியாலும்,நோயினாலும் இறந்தனர். இன்னும் நிறைய பேர் நாஜிக்களால் கொல்லப்பட்டனர். அந்த அக்டோபர் மாதம் இரண்டு சகோதிரிகளையும் பெர்கன்-பெல்சன் எனும் முகாமிற்கு அனுப்பப்பட்டனர் . பெற்றோர்களோ ஆஸ்விட்ச் முகாமிலேயே அடைக்கப்பட்டிருந்தனர். இதில் ஆனின் தாய் எடித் இறந்து விடுகிறாள். அந்த ஆண்டு நீண்ட மோசமான குளிர்காலமாக இருந்தது. முதலில் மார்கோட் டைபஸ் எனும் நோயால் இறந்தாள். ஆனும் சிறிது காலத்திலேயே மரணம் அடைந்தாள். அவளுக்கு அப்போது பதினாறு வயது கூட ஆகவில்லை .



ஆனின் டைரி குறிப்புக்களும் , மற்ற காகிதங்களும் அந்த ரகசிய இருப்ப்பிடத்திலேயே இருந்தது . அதை மியப் ஜெய்ஸ் பத்திரப்படுத்தி வைத்திருந்தார். போர் முடிந்தவுடன் ஆனின் அப்பா ஆம்ஸ்டர்டம் திரும்பி சென்றார். இருந்தவர்களிலேயே அவர் மட்டுமே உயிர் பிழைத்திருந்தார். அந்த கடுங்குளிர் காலத்தையும் தாண்டி வந்தவர் அவர் மட்டுமே. ஆனின் டைரி அவரிடம் மியப் ஜெய்ஸ் கொடுத்த போது இதை எப்படியாவது பதிப்பித்து விட வேண்டும் என்று அவர் முடிவு செய்தார்.



ஆனின் டைரி மிகவும் பிரசித்தியானது . பல மொழிகளில் அதை மொழிபெயர்த்தனர். ஆனின் தைரியத்தையும் முதிர்ச்சியையும் பாராட்டி அவள் வாழ்க்கை கதையை நாடகமாக இயற்றினர். அவள் வாழ்ந்த அந்த இரகசிய வீட்டை அருங்காட்சியமாக மாற்றினர். ஆன் அவளுடைய எழுத்தின் மூலம் உலகத்தில் உள்ள அனைவரின் மனதிலும் இடம் பெற்றுவிட்டாள் . இன்று வரை அவளுடைய கதை இளைஞர்களுக்கு ஒரு உத்வேகமாகவே இருந்து வருகிறது .



# ஆசிரியர் குறிப்பு

1947ல் முதலில் வெறும் 1500 பிரதிகளே பதிக்கப்பட்டது. பிரென்ச், ஜெர்மன் மொழியிலும் அதன் பிறகே பதிக்கப்பட்டது. முதல் ஆங்கில மொழிபெயர்ப்பு "ஆன் - ஒரு இளம்பெண்ணின் டைரி குறிப்புகள்" (Anne- The Diary of a Young girl) 1952ல் பதிக்கப்பட்டது . அதிலிருந்து இன்று வரை ஐம்பது மொழிகளில் மொழி பெயர்க்கபட்டுள்ளது. இரண்டரை கோடி புத்தகம் உலகம் முழுவதும் விற்க பட்டுள்ளது. ஒரு நாள் இப்புத்தகம் வெளி வரும் என்பதை உணர்ந்த ஆன் அங்கு வாழ்ந்த அனைவருக்கும் புனை பெயர் வைத்தே எழுதியிருந்தாள். ஆனால் இந்த புத்தகத்தில் எல்லோருக்கும் அவரவர் உண்மை பெயரை வைத்தே எழுதியுள்ளேன்.

இந்த காலகட்டத்தில் எவ்வளவு யூதர்கள் இறந்து போனார்கள் என்ற உண்மையான எண்ணிக்கை தெரியாவிட்டாலும் குறைந்தது அறுபது லட்ச மக்கள் இறந்து போயினர் என்பது உறுதியாக கூறப்படுகிறது. யூதர்கள் மட்டுமில்லாமல் கம்யூனிஸ்டுகள், ஓரினச்சேர்க்கையாளர்கள், ஊனமுற்றோர்கள் என பலரும் கொல்லப்பட்டனர். நாஜிக்கள் யாரெயெல்லாம் குறை-மனிதர்கள் என்று நினைத்தார்களோ அவர்களை அடிமை படுத்துதல், சாகடித்தல் போன்ற கொடுங்கரியங்களையே செய்தனர்.

வதை முகாம்கள் பெரும்பாலும் யூதர் மக்களை அடிமை வேலை செய்வதற்காகவே உருவாக்கப்பட்டிருந்தாலும் அதில் பல முகாம்கள் யூதர்களை விஷ வாயு கொண்டு உயிர் பறிப்பதற்காகவும் இருந்தது.இந்த முகாம்கள் உலகின் கண்களில் இருந்து மறைக்கப்பட்டிருந்தன. ஆஸ்விட்ச் முகாம் போலந்தில் ஒரு தனிமையான இடத்தில அமைக்கப்பட்டிருந்தது. ஆனும் மார்கோட்டும் இளமையாக இருந்தனர் என்பதால் அவர்களை ஆஸ்விட்ச்சில் இருக்க விடவில்லை. அவர்களை பெர்கென் பெல்சன் என்ற முகாமிற்கு அவர்களை வேலை செய்ய அனுப்பி வைக்கப்பட்டனர்.

இந்த ஆனின் சுய சரிதையை சிறுவர்களுக்காக எழுதுவதற்கு முன்பு என் மனதில் எழுந்த கேள்வி ஏன் இந்த கதையை இளம்பிள்ளைகளுக்கு கூற வேண்டும் என்பதே. இந்த கொடூர நிகழ்வுகளை கூறாமல் இருந்தால் தான் என்ன? என் பிள்ளைகளுக்கு இதை கூறி தான் ஆக வேண்டுமா? பிறகு கடைசியில் இக்கதையை இளம்பிள்ளைகளுக்கு கூறுவதில் ஒரு அர்த்தம் உள்ளது என்று முடிவுக்கு வந்தேன். சில சமயங்களில் பெரியவர்கள் செய்யும் குற்றங்கள் சிறியவர்களுக்கு புரியாமல் போனாலும் அதே உலகத்தில் தான் வாழவேண்டி இருக்கிறது.அதை புரிந்து கொள்வது அவசியமும் ஆகும். இந்த ஹோலோகாஸ்ட் எனும் கொடும்-சம்பவத்தை புரிவதற்கு என் புத்தகம் உதவும் என நம்புகிறேன்.